# ॥ श्रीविष्णुभुजङ्गप्रयातस्तोत्रम् ॥

# விஷ்ணு புஜங்கப்ரயாதஸ்தோத்ரம்

(1)

चिदंशं विभुं निर्मलं निर्विकल्पं
निरीहं निराकारमोंकारगम्यम् ।
गुणातीतमव्यक्तमेकं तुरीयं
परं ब्रह्म यं वेद तस्मै नमस्ते ॥

சிதம்சம் விபும் நிர்மலம் நிர்விகல்பம்
நிரீஹம் நிராகார மோங்காரகம்யம்।
குணாதீத மவ்யக்த மேகம் துரீயம்
பரம் ப்ரஹ்ம் யம் வேத தஸ்மை நமஸ்தே॥

'சித்' ஸ்ரூபியாய் எங்கும் நிறைந்து மாசற்ற நிலையில், விகல்பம், விருப்பம், வடிவம் இவையற்றதாய் ஓங்காரப் பொருளாய் இருப்பதும், குணங்களுக்குப்பால் அவ்யக்தமாய் ஒன்றாய் துரீய நிலை கொண்டு விளங்கும் பரம் பொருளை நமஸ்கரிக்கிறேன்.

(2)

विशुद्धं शिवं शान्तमाद्यन्तशून्यं
जगज्जीवनं ज्योतिरानन्दरूपम् ।
अदिग्देशकालव्यवच्छेदनीयं
त्रयी वक्ति यं वेद तस्मै नमस्ते ॥

விசுத்தம் சிவம் சாந்த மாத்யந்த சூன்யம்
ஜகஜ்ஜீவநம் ஜ்யோதி ரானந்த ரூபம்।
அதிக்தேச கால வ்யவச்சேத நீயம்
த்ரயீ வக்தி யம் வேத தஸ்மை நமஸ்தே॥

தூய சிவமாய், ஆதியந்தமில்லாத சாந்தமேயுருவாய், உலகை உய்விக்கும் ஜ்யோதியாய், ஆனந்த ரூபியாய், தேசம், காலம் இவற்றால் பகுத்து அறிய முடியாததாய் வேதம் கூறியபடி இருக்கும் எம்பெருமானுக்கு நமஸ்காரம்.

(3)

महायोगपीठे परिभ्राजमाने
धरण्यादितत्त्वात्मके शक्तियुक्ते ।
गुणाहस्करे वह्निबिम्बार्धमध्ये
समासीनमोंकर्णिकेऽष्टाक्षराब्जे ॥

மஹாயோக பீடே பரிப்ராஜமாநே
தரண்யாதி தத்வாத்மகே சக்தியுக்தே।
குணஹரஸ்கரே வஹ்நிபிம்பார்த்தமத்யே
ஸமாஸீந மோங்கர்ணிகேடஷ்டாக்ஷராப்ஜே॥

பூ:, பவ: ஸுவராதி த்வங்களாலானதும், சக்தி கொண்டதும், குணமாகிய சூர்யன் விளங்குவதும், அக்னி பிம்பத்தின் நடுப் பகுதியில், ப்ரணவமாகிய கர்ணிகையும், அஷ்டாக்ஷரமாகியு எட்டு இதழ்கள் கொண்ட தாமைரையும் உள்ள மஹாயோக பீடத்தில் அமர்ந்திருப்பவரான பரமனுக்கு நமஸ்காரம்.

(4)

समानोदितानेकसूर्येन्दुकोटि –
प्रभापूरतुल्यद्युतिं दुर्निरीक्षम् ।
न शीतं न चोष्णं सुवर्णावदात–
प्रसन्नं सदानन्दसंवित्स्वरूपम् ॥

ஸமாநோதிதாநேக ஸூர்யேந்து கோடி -
ப்ரபாபூர துல்யத்யுதிம் துர்நிரீக்ஷம்।
ந சீதம் நசோஷ்ணம் ஸுவர்ணாவதாத -
ப்ரஸன்னம் ஸதாநந்த ஸம்வித்ஸ்வரூபம்॥

ஒரேஸமயத்தில் உதித்த பல சூர்ய சந்திரர்களின் ஒளிக் கற்றை யொத்த ஒளியை உடைவராதலால் கண்ணால் காண முடியாதவராயும், குளிர்ச்சியும், சூடும் இல்லாத வராய் தங்கநிறமாய், எப்பொழுதும் ஆனந்த-பேரறிவு வடிவினராய் விளங்கும் பரமனுக்கு நமஸ்காரம்.

(5)

सुनासापुटं सुन्दरभ्रूललाटं
किरीटोचिताकुञ्चितस्निग्धकेशम् ।
स्फुरत्पुण्डरीकाभिरामायताक्षं
समुत्फुल्लरत्नप्रसूनावतंसम् ॥

ஸுநாஸாபுடம் ஸுந்தரப்ரூலலாடம்
கிரீடோசிதாகுஞ்சிதஸ்நிக்த கேசம்।
ஸ்புரத் புண்டரீகாபி ராமாயதாக்ஷம்
ஸமுத்புல்ல ரத்னப்ரஸூநாவதம்ஸம்॥

அழகிய மூக்கு, புருவம், நெற்றி இவைகளைக் கொண்டவரும், கிரீடத்திற்கு ஏற்றவாறு சற்று வளைந்த மினு மினுப்பானகேசம் கொண்டவரும், மலர்ந்தவெண்தாமரை போன்று அழகிய நீண்டகண்களும், பளபளக்கும் ரத்ன மிழைத்த ஆபரணங்களும் உடையவரான, பரமனுக்கு நமஸ்காரம்.

(6)

लसत्कुण्डलामृष्टगण्डस्थलान्तं
जपारागचोराधरं चारुहासम् ।
अलिव्याकुलामोदिमन्दारमालं
महोर: स्फुरत्कौस्तुभोदारहारम् ॥

லஸத் குண்டலாம்ருஷ்ட கண்டஸ்தலாந்தம்
ஜபாராக சோராதரம் சாருஹாஸம்।
அலிவ்யாகுலா மோதி மந்தாரமாலம்
மஹோரா:ஸ்புரத் கௌஸ்து போதாரஹாரம்॥

ஒளிரும் குண்டலங்கள் உராயும் கன்னங்களையுடையவரும், செம்பருத்திப்பூ நிறத்தை கொண்ட உதடும் அழகிய புன்முவறுவலும், வண்டினங்கள் மொய்க்கும் மந்தாரமாலையும், பரந்த மார்பில் மின்னும் கௌஸ்துபமும், கொன்டை மாலையும் கொண்டவருமான அந்த பரமனுக்கு நமஸ்காரம்.

(7)

सुरत्नाङ्गदैरन्वितं बाहुदण्डै -
श्चतुर्भिश्चलत्कङ्कणालंकृताग्रैः ।
उदारोदरालंकृतं पीतवस्त्रं
पदद्वन्द्वनिर्धूतपद्माभिरामम् ॥

ஸுரத்னாங்கதை ரன்விதம் பாஹுதண்டைஃ
சதுர்பிஸ்சலத் கங்கணாலங்க்ருதாக்ரைஃ
உதாரோதராலங்க்ருதம் பீதவஸ்த்ரம்
பதத்வந்த்வ நிர்தூத பத்மாபிராமம்॥

ரத்னமயமானதோள் வளைகளும், குலுங்கும் கங்கணங்களும் சேர்ந்து அழகுறச்செய்த நான்கு கைகளும், பாங்கான உதரமும், இடையில் பட்டுப்பீதாம்பரமும், தாமரையைப் பழிக்கும் கால்களுமாக விளங்கிய அந்தபரமனுக்கு நமஸ்காரம்.

(8)

स्वभक्तेषु सन्दर्शिताकारमेवं
सदा भावयन्संनिरुद्धेन्द्रियाश्वः ।
दुरापं नरो याति संसारपारं
परस्मै परेभ्योऽपि तस्मै नमस्ते ॥

ஸ்வபக்தேஷுஸந்தர்சிதாகாரமேவம்
ஸதா பாவயன் ஸந்நிருத்தேந்திரியாச்வஃ
துராபம் நரோ யாதி ஸம்ஸாரபாரம்
பரஸ்மை பரேப்யோऽபி தஸ்மை நமஸ்தே॥

தனது பக்தர்களுக்கு இவ்வாறு காட்சி தரும் அப்பெருமானை, புறக்கரணங்களாகிய குதிரையை அடக்கி தியானம் செய்யும் மனிதர் எவரும் எட்டாத ஸம்ஸார எல்லையைக் கடந்து விடுவர். அத்தகைய பரம்பொருளக்கு நமஸ்காரம்.

(9)

श्रिया शातकुम्भद्युतिस्निग्धकान्त्या
धरण्या च दूर्वादलश्यामलाङ्ग्या ।
कलत्रद्वयेनामुना तोषिताय
त्रिलोकीगृहस्थाय विष्णो नमस्ते ॥

பளபளக்கும் தங்கநிறம் கொண்ட லக்ஷ்மியோடும், அருகம்புல் போல கரும்பச்சை நிறம் கொண்ட பூதேவியோடும் இவ்விருதேவிகளுடன் மகிழ்ச்சி கொண்ட மூவுலகிற்கும் கிருஹஸ்தனான விஷ்ணுவை நமஸ்கரிக்கிறேன்.

(10)

शरीरं कलत्रं सुतं बन्धुवर्गं
वयस्यं धनं सद्म भृत्यं भुवं च ।
समस्तं परित्यज्य हा कष्टमेको
गमिष्यामि दुःखेन दूरं किलाहम् ॥

சரீரம் கலத்ரம் ஸுதம் பந்து வர்கம்
வயஸ்யம் தனம் ஸத்ம ப்ருத்யம் புவம் ச।
ஸமஸ்தம் பரித்யஜ்ய ஹா கஷ்டமேகோ
கமிஷ்யாமி துஃகேந தூரம் கிலாஹம்॥

உடலையும், மனைவி, மகன், உறவினர், நண்பன், சொத்து, வீடு, வேலையாள், இன்னும் இந்த மண்ணுலகம் அனைத்தையும் விட்டுவிட்டு வெகு தூரம் நான் தனியாகச் செல்லப்போகிறேனே! கஷ்டம் இது.

(11)

जरेयं पिशाचीव हा जीवतो मे
वसामत्ति रक्तं च मांसं बलं च ।
अहो देव सीदामि दीनानुकम्पि –
न्किमद्यापि हन्त त्वयोदासितव्यम् ॥

ஜரேயம் பிசாசீவ ஹா ஜீவதோ மே
வஸா மத்தி ரக்தம் ச மாம்ஸம் பலம் ச।
அஹோ தேவ ஸீதாமி தீனானுகம்பின்
கிமத்யாபி ஹந்த த்வயோதாஸிதவ்யம்॥

பெண்பிசாசு போன்றிருக்கிற இந்தமுதுமை, பிழைத்திருக்கும்போதே என் கொழுப்பையும், ரத்தத்தையும், மாம்ஸத்தையும், பலத்தையும் தின்றுவிடுகிறதே! நான் அல்லல் படுகிறேன்! ஹே எளியவரை நேசிக்கும்கடவுளே! நீர் இன்னுமா வாளா விருக்க வேண்டும்?

(12)

कफव्याहतोष्णोल्बणश्वासवेग –
व्यथाविस्फुरत्सर्वमर्मास्थिबन्धाम् ।
विचिन्त्याहमन्त्यामसंख्यामवस्थां
बिभेमि प्रभो! किं करोमि प्रसीद ॥

கபவ்யாஹதோஷ்ணோல்பணச்வாஸ வேக
வ்யதா விஸ்புரத்ஸர்வ மர்மாஸ்தி பந்தாம்।
விசிந்த்யா ஹமந்த்யா மஸங்க்யா மவஸ்தாம்
பிபேமி ப்ரபோ கிம் கரோமி ப்ரஸீத॥

கபத்தினால் தடைபடும் சூடான மூச்சுத்திணறால் வெடித்தவிடும் போலுள்ளன எனது மர்மஸ்தான எலும்புகள். இத்தகைய கடைசிகால அவஸ்தையை நினைத்து நான் பெரிதும் அச்சப்படுகிறேனே! என்ன செய்வேன். ஹேப்ரபோ! கருணை புரிய வேண்டும்!

(13)

लपन्नच्युतानन्त गोविन्द विष्णो
मुरारे हरे नाथ नारायणेति ।
यथानुस्मरिष्यामि भक्त्या भवन्तं
तथा मे दयाशील देव प्रसीद ॥

லபன் அச்யுதானந்த கோவிந்த விஷ்ணோ
முராரே ஹரே நாத நாராயணேதி।
யதா஽னு ஸ்மரிஷ்யாமி பக்த்யா பவந்தம்
ததா மே தயாசீல தேவ ப்ரஸீத॥

நான் உமது நாமாக்களை-அச்யுத, அனந்த, கோவிந்த, விஷ்ணோ, முராரே, ஹரே, நாத, நாராயண - என்றவாறு ஜபித்துக்கொண்டு பக்தியுடன் உம்மை நினைக்குமளவுக்கு என்னை கடாக்ஷித்து அருளவேணும். நீர் தயாபரரல்லவா?

**(14)**

भुजङ्गप्रयातं पठेद्यस्तु भक्त्या
समाधाय चित्ते भवन्तं मुरारे ।
स मोहं विहायाशु युष्मत्प्रसादात्
समाश्रित्य योगं व्रजत्यच्युतं त्वाम् ॥

புஜங்கப்ரயாதம் படேத்யஸ்து பக்த்யா
ஸமாதாய சித்தே பவந்தம் முராரே।
ஸ மோஹம் விஹாயாசு யுஷ்மத்ப்ரஸாதாத்
ஸமாச்ரித்ய யோகம் வ்ரஜத்யச்யுதம் த்வாம்॥

ஹே முராரே! உம்மை மனதில் தியானித்து இந்த புஜங்கப்ரயாதஸ்தோத்ரத்தைப்படிப்பவர், தங்களது பேரருளால் மோஹம் நீங்கப்பெற்று, யோகத்தை கைக்கொண்டு அச்யுதனான உம்மையடைவர்.

ஸ்ரீ விஷ்ணுபுஜங்கப்ரயாதஸ்தோத்ரம் முற்றிற்று

